# சைவ சமயம் - அடிப்படை நுட்பம் பயிற்சி கோப்பு 2 - பகுதிகள்

1. சைவ நெறி
2. திருக்கோவில் வழிபாட்டு முறை
3. சிவ தொண்டு செய்வீர்
4. உங்களுக்குத் தெரியுமா ?

YouTube Channel: Shivakudumbam

பகுதி 1: https://www.youtube.com/watch?v=VRwNOZap3MU

பகுதி 2: https://www.youtube.com/watch?v=KQtTDsWkKTY

# சைவ சமயம் - அடிப்படை நுட்பம் பயிற்சி கோப்பு 2 பகுதிகள்

1. சைவ நெறி
2. திருக்கோவில் வழிபாட்டு முறை
3. சிவ தொண்டு செய்வீர்
4. உங்களுக்குத் தெரியுமா ?

நமசிவாய    உ சிவமயம்    சிவாயநம

# தென்னாடுடைய சிவனே போற்றி !!
# எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!!

தமிழனாக, சைவனாக பிறப்பதற்கு பல பிறவிகளில் புண்ணியம் செய்திருக்க வேண்டும் !!!

நம் முன்னோர்கள் நமக்கு அருளிய அளப்பரிய புதையல்

## சைவ சமயம்

9

## சைவ நெறி

# முப்பொருள் உண்மை

ஆணவம்
கன்மம்
மாயை

பாசம்,
தளை

பதி,
இறை









பசு,
உயிர்

பதி, பசு, பாசம் மூன்றும் அநாதி. இம்மூன்றும் என்றும் உள்ளவை. இறைவன் உயிர்களையும் உலகையும் படைக்கவில்லை.

சைவ சமய
அடிப்படை தத்துவம்

கடந்த பல ஆயிரமாண்டுகளில் பல்வேறு தத்துவங்கள் தோன்றித் தோன்றி மறைந்து போயின

**பாசம் உயிர்களை மயக்கும். வீணான பொருட்களில் காலத்தை கடத்தி அலைக்கழிக்கும். பொய்யை மெய் என்று கருத வைக்கும். சிற்றின்பமே கொடுக்கும்.**

**உயிர்கள் நிலையற்ற பாச மயக்கத்தை உணர்ந்து, பாசத்தைக் களைந்து, இறைவனையும் அவன் கருணையையும் உணர்ந்து, அவனைப் போற்றி சரண்புக வேண்டும். அதுவே முக்தி. அதுவே பேரின்பம்.**




**பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடி சேராதார்.** வள்ளுவர்

உயிர்கள் செய்யும்

# வினைகள் இரண்டு

வினைகளை செய்யும் கருவிகள்

மனம் – உள்ளம்

வாக்கு – உரை

காயம் – உடல்









**நல்வினை** | **தீவினை**

விளைவு | விளைவு

**புண்ணியம்** | **பாவம்**

இருவினை ஒப்பு – இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக பாவிக்கும் மனநிலை

# வினை வகைகள் 3

## பழவினை – தொல்வினை (சஞ்சிதம்)
## புதுவினை – வருவினை (ஆகாமியம்)
## ஊழ்வினை – நுகர்வினை (பிராரத்துவம்)

### பழவினை

மூலவினை முதற்கொண்டு
செய்த வினைகள்
பக்குவப்பட்டு
பாவபுண்ணிய பலன்களை
கொடுக்கும் நிலை வரை
பழவினையாக
குவிந்திருக்கும்

### புதுவினை

பக்குவப்பட்ட
வினைகளை உயிர்கள்
அனுபவிக்க வேண்டியது
நியதி. வினைகளுக்கேற்ப
பிறப்பு, ஆயுள் பெறும்.
இப்பிறப்பில் செய்யும்
வினைகள் புதுவினை.

### ஊழ்வினை

எல்லா வினைகளையும்
ஒரே பிறவியில்
அனுபவிக்க முடியாது.
இப்பிறவியில்
அனுபவிக்க வேண்டியது
ஊழ்வினை.

## பிறவியும் வினைகளும்

ஊழ்வினை
பிராரத்துவம்



1

இப்பிறவி

2



நல்லவன்

2





மரணம்

புதுவினை
ஆகாமியம்

3

கெட்டவன்

3

புதுவினை
ஆகாமியம்

மரணம்







பழவினை

சஞ்சிதம்




உயிரை வினைகள் ஒன்றை ஒன்று பற்றி வரும் போது, பிறவிச் சுழல் ஏற்படுகிறது. இந்த சுழலில் இருந்து நம்மை பக்குவப்படுத்தி விடுதலை அளிப்பது இறைவன் மட்டும். ஆகவே, இறைவனது திருவடி நிழலே உயிர்கள் அனைத்தும் கடைசியாக செல்ல வேண்டிய இடம்.

**மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றையும் இறைவனுக்குத் தொண்டு செய்யும் அடிமைகளாக ஆக்கினால், இறைவன் திருவருளைப் பெறலாம். இதற்கு சித்தாந்தம் நான்கு நெறிகளைக் கூறும்.**

# உயிர்கள் இறைவனை அடைவது எப்படி ?

இயற்கையாகவே உயிர்களை பாசம் பற்றியுள்ளது. உலகத்தையே மெய் என்று எண்ணி மயங்கும். இறையருளால் பாசம் நீங்கினால், உயிர்கள் இறைவனை உணர்ந்து அடையும்.

உயிர்கள் இறைவனை உணர்ந்து அடைய 4 படிநிலைகள் உள்ளது.

# சைவ நெறிகள் (படிநிலைகள்) நான்கு




## சரியை

இறைவன் உருவ திருமேனிகளை புறத்தே வணங்கி, சிவாலயத்திற்கும், சிவனடியார்களுக்கும் தொண்டு செய்தல்

முக்தி: சாலோகம்

## கிரியை

இறைவனது அருவுருவத் திருமேனியை அகத்தும் புறத்தும் பூசித்தல்

முக்தி: சாமீபம்









## யோகம்

சிவனை அகத்தே பூசித்தல்

முக்தி: சாரூபம்

## ஞானம்

முப்பொருள் உண்மையை அறிவிக்கும் ஞான நூல்களை கேட்டு சிந்தித்து தெளிந்து நிட்டை கூடுதல்.

முக்தி: சாயுச்சியம்



# இறைவனுக்கும் நமக்கும் உள்ள உறவு




## தாச மார்க்கம்

இறைவனை எஜமானராக
பாவித்தல்




## சத்புத்ர மார்க்கம்

இறைவனை தாய்
தந்தையாக பாவித்தல்






## சக மார்க்கம்

இறைவனை
நண்பனாக பாவித்தல்




## சன் மார்க்கம்

இறைவனை குருவாக
பாவித்தல்

“நாலு பேர் போன பாதைல போகணும்”

# நால்வர் காட்டிய வழி



சத்புத்ர மார்க்கம்
இறைவனை தாய் தந்தையராக அணுகுதல்
திருஞானசம்பந்தன்



இறைவனை அடைய பல வழிகள். அதில் இந்த நால்வர் காட்டிய வழி மிகவும் சிறப்பானது.



தாச மார்க்கம்
இறைவனை எசமானராய் அணுகுதல்
திருநாவுக்கரசர்

சன் மார்க்கம்
இறைவனை குருவாய் அணுகுதல்



மாணிக்கவாசகர்

சக மார்க்கம்
இறைவனை தோழனாக அணுகுதல்



சுந்தரர்



சிவ நெறியில் நின்று சிவநாமங்கள் ஓதி, சத்திநிபாதம் பெற்று முக்தி அடைபவர்கள் இவ்வுடலை விட்டு வீடுபேறு அடையும் போது, அவர்களை அழைத்துச் செல்ல எமதர்மராஜன் வரமாட்டார். மாறாக, சிவ பூதகணங்கள் சிவலோகம் அழைத்துச் செல்ல வரும்.



**முக்தி அடைந்த பின் நாம் என்ன செய்வோம் ?**
**முக்தியின் வகைகள் யாவை ?**

# முக்தி நிலைகள் நான்கு




## சாலோகம்

சிவலோகம் சென்று
சிவ தொண்டு புரிதல்

## சாமீபம்

சிவனுக்கு அருகே
இருந்து அணுக்கத்
தொண்டு புரிதல்




## சாரூபம்

சிவனுக்கு பயன்படும்
உருவமாகி தொண்டு
புரிதல்



## சாயுச்சியம்

இறைவனோடு இரண்டற
கலந்து இன்பத்தை
அனுபவித்தல்



# தீட்சை

**தீ** – கெடு – பாசத்தை கெடு

**க்ஷை** – கொடு – வீடுபேற்றை கொடு

தீக்கை முறைகள் நம் மனதைப் பக்குவப் படுத்துவதற்காக அமைக்கப் பட்ட சடங்குகள்

- ✓ *சமய தீட்சை*

  *சமய நுழைவுக்கு அனுமதி*

- ✓ *விசேட தீட்சை*

  *சிவபூசை செய்வதற்குரிய சிறப்பு தகுதி*

- ✓ *நிருவாண தீட்சை*

  *பாசபந்தம் நீக்கி இறைவன் திருவடி அடைய*

# திருவைந்தெழுத்து

| ந | ம | சி | வ | ய |
|---|---|---|---|---|

ந – மறைப்பாற்றல் (மருள், திரோதானம்)
ம – மும்மலங்கள் (இருள்)
சி – சிவபெருமான் (பதி)
வ – திருவருள் (சக்தி)
ய – உயிர்கள் (ஆன்மா)

**தலையாய மந்திரம்**

நமசிவய – தூல பஞ்சாட்சரம் – இறைவனின் மறைப்பு சக்தியால் மும்மலங்களும் நீங்கி, சிவபெருமான் திருவருளால் ஆன்மா உய்வு பெறும். இதை ஓதினால் உலக இன்பங்கள் கிடைக்கும். பிறர் கேட்குமாறு ஓதலாம்.

சிவயநம – சூக்கும பஞ்சாட்சரம் – சிவபெருமான் திருவருளால் ஆன்மா இறைவனின் மறைப்பு சக்தியால் மலம் நீங்கப் பெற்று உய்வு பெறும். இதை ஓதினால் முக்தி பேறு கிட்டும். இதை மனதிற்குள் ஓத வேண்டும்.

நமசிவாய சிவமயம் சிவாயநம

# தென்னாடுடைய சிவனே போற்றி !!
# எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!!

தமிழனாக, சைவனாக பிறப்பதற்கு பல பிறவிகளில் புண்ணியம் செய்திருக்க வேண்டும் !!!

நம் முன்னோர்கள் நமக்கு அருளிய அளப்பரிய புதையல்

## சைவ சமயம் 10

## சிவாலய தரிசன முறை

# திருக்கோயில் வழிபாடு

தினமும் திருக்கோவில் சென்று வழிபட வேண்டும். இதை வழக்கமாகக் கொள்ளுதல் வேண்டும். மற்ற நேரங்கள்:

- விரத நாட்கள்
- திங்கள், செவ்வாய், வெள்ளி
- பிரதோசம்
- பூரணை
- அமாவாசை
- திருவாதிரை
- கார்த்திகை
- பிறந்த, திருமண நாள்
- மாதப்பிறப்பு
- சூரிய, சந்திர கிரகணம்
- சிவராத்திரி
- நவராத்திரி
- விநாயகர் சதுர்த்தி
- கந்தசஷ்டி
- முற்றோதல்
- திருவிழா காலங்கள்

# கோவிலுக்குள் செல்லும் முன்...

**கோவில் மிகவும் சுத்தமான இடம். புறமும் அகமும் தூய்மையாக வைத்துக் கொண்டு அத்தூய்மையினை பேணிக் காத்தல் வேண்டும்.**

- ✓ நீராடுதல்
- ✓ சுத்தமான உலர்ந்த ஆடை உடுத்தல்
- ✓ விபூதியும் உருத்திராக்கமும் அணிதல்
- ✓ சிவநாமங்களை உச்சரித்தல்

கோவிலை அடைந்ததும் குளத்தில் நீராடி செல்ல வேண்டும். குளம் இல்லாத பட்சத்தில் கை கால்களை நன்றாக கழுவ வேண்டும்.

**1** **கோபுரம் தூலலிங்கம். முதலில் கோபுரத்தை வணங்க வேண்டும்.**



# மனித தேகமே ஆலயம் - சாய்ந்த கோலம் விளக்கப்படம்

## தேகமே ஆலயம்
(OUR BODY IS A TEMPLE)

BALA YOGA CENTRE

ஓம்

ந ம சி வ ய

ஓடியோடி யோடியோடி யுட் கலந்த சோதியை
நாடிநாடி நாடிநாடி நாட்களுங் கழிந்துபோய்
வாடிவாடி வாடிவாடி மாண்டுபோன மாந்தர்கள்
கோடிகோடி கோடிகோடி எண்ணிறந்த கோடியே
(சிவ வாக்கியர்)

ஸ்ரீ பரமஹம்ச சச்சிதானந்த யோகீஸ்வரர் தன் சரீரத்தையே தேவாலயமாய்க் கட்டிக் காட்டுகின்றார்

அறம் பொருள் இன்பம் வீடு வாழும் நெறி




**மேல் நிலை ஆதாரங்கள் (UPPER LEVEL CHAKARAS)**

1. மூலாதாரம் (MULADHARA)
2. சுவாதிட்டானம் (SWASTHISTANA)
3. மணிபூரகம் (MANIPURAGA)
4. அநாகதம் (ANAHATHA)
5. விசுத்தி (VISUTHI)
6. ஆக்ஞை (AJNA)
7. சஹஸ்ராரம் (SAHASRA)

**கீழ் நிலை ஆதாரங்கள் (LOWER LEVEL CHAKARAS)**

1. பயம் (FEAR)
2. பொறாமை (JEALOUSY)
3. வெறுப்பு (HATRED)
4. காமம் (LUST)
5. பேராசை (GREED)
6. குற்ற உணர்வு (GUILT)
7. மனக்கவலை (MELANCHOLY)

மனித உடலுக்குள்ளேயே இறைவனைக் கண்டவர்கள் நம் முன்னோர்கள். அவர்கள் கண்ட இறைவனை நமக்கு விளக்கவே அவர்கள் கண்டதை அப்படியே வெளிப்புற வடிவமாக அமைத்தார்கள். அதையே நாம் கோவில் என்கிறோம்.

திருமூலர்

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**
**வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.**



இன்றைய மருத்துவமனைகள் நமக்கு நோய் வந்தபின் காக்கும் காரணிகளாக உள்ளன. ஆனால், நம் கோவில்களோ, நம் உடல் நலத்தையும் மன நலத்தையும் பேணி வலுவேற்றி, வரும் முன் காக்கும் காரணியாக இருந்தன, இருக்கின்றன.



பலி பீடம் – பல எண்ண அலைகளோடு நாம் கோவிலுக்கு வருவோம். அந்த எண்ணங்கள் யாவையும் பலிபீடத்தில் பலியிட வேண்டும். இதனால், உள்ளம் தூய்மை அடையும். சுவாமி தரிசனத்திற்கு நம் மனது தயாராகும்.

2

கோபுர தரிசனத்திற்குப் பின், கோவில் படியை வணங்கி, கோவிலுக்குள் நுழைந்து கொடிமர தம்பத்தையும், பலிபீடத்தையும், நந்தி தேவரையும் வணங்கி கொடிமர தம்பத்திற்கு இப்பால் ஆண்கள் அட்டாங்க வணக்கமும் பெண்கள் பஞ்சாக வணக்கமும் செய்தல் வேண்டும்.

பஞ்சாங்க வணக்கம்
உடலின் 5 உறுப்புகள் தரையில் படுமாறு வணங்குதல்
அட்டாங்க வணக்கம் – 8 உறுப்பு



3

கோவில் இறைவரை மனதில் வணங்கிக் கொண்டு, அவர் திருவுருவை நினைத்துக் கொண்டும், பஞ்சாக்கரம் செபித்துக் கொண்டும், திருக்கோயிலை வலம் வருதல் வேண்டும். எத்தனை முறை வலம் வருதல் வேண்டும் ? (3,5,7,9,15,21)

துவார பாலகரை வணங்கி, கணநாயகராகிய திருநந்தி தேவரை துதித்து "பகவானே, உம்முடைய திருவடிகளை அடைந்த அடியேன் உள்ளே புகுந்து சிவபெருமானைத் தரிசித்துப் பயன்பெறும் பொருட்டு அனுமதி செய்தருளும்" என வணங்கி செல்ல வேண்டும்.

4

5

## விநாயகரை வணங்குதல் வேண்டும்



சிவபெருமானுடைய சந்நிதியை அடைந்து அவரை தரிசித்து, மனசிலே தியானித்து, சிரசிலும் இருதயத்திலும் அஞ்சலி செய்து, மனம் கசிந்துருகி, உரோமம் சிலிர்ப்ப, ஆனந்த அருவி சொரிய, 32 பண்களுள் தோத்திரங்களை வாயார பாட வேண்டும். பஞ்ச புராணம் பாடுவது மரபு.

6

**பஞ்ச புராணம்**

தேவாரம்
திருவாசகம்
திருவிசைப்பா
திருப்பல்லாண்டு
பெரியபுராணம்

நாம் இறக்கும் போது நமக்கு துணைக்கு யாரும் வரமாட்டார்கள். நாம் செய்யும் பாவ புண்ணியங்களும், சிவபெருமானும் மட்டுமே வருவர். ஆகவே, மற்றவர்களைப் பற்றிக் கவலைப்படாது, நம் தலைவனை இராஜாதி இராஜனை வாயார போற்றி எளிய தமிழ் திருமுறைகளை பாடுங்கள்

7

சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்ரமணியர், சமயாச்சாரியார் நால்வரை தரிசித்து வணங்கி துதிக்கக்கடவர்

பார்வதி தேவி சந்நிதியை அடைந்து சிரசிலும் இருதயத்திலும் அஞ்சலி செய்து, மனதிலே தியானித்து, தோத்திரங்களை சொல்லக்கடவர். பின்னர் வலம் வந்து சண்டேசுரர் சந்நிதியை அடைந்து வணங்கி தோத்திரம் செய்து தாளத்திரயம் செய்து பிரார்த்திக்கக்கடவர்.

8

**சண்டிகேசுரர் முன் கை தட்டலாமா ?**

கூடவே கூடாது. சண்டிகேசுரர், சிவபெருமானை எண்ணியே ஆழ்ந்த தியானத்தில் எப்போதும் இருப்பவர். அவர் தியானம் கெடும்படி கை தட்டுவது கூடாது. விரல் சொடுக்குதலும் கூடவே கூடாது. இடது உள்ளங்கையில் வலது கையின் நடு 3 விரல்களைக் கொண்டு மெதுவாக சத்தமில்லாமல் தட்டுவது தாளத்திரயமாகும். அமைதியாக வணங்கிச் செல்வதே மிகச் சிறந்ததாகும். அவர் உம்மை அறிவார்.

9

# நந்தி தேவரை அடைந்து வணங்கித் துதித்து பலிபீடத்துக்கு இப்பால் மும்முறை வணங்கி எழுந்து வடக்கு நோக்கி சிவபெருமானை தியானித்து பஞ்சாட்சரம் செபித்து வீட்டுக்கு போகக்கடவர்.

## உங்களுக்குத் தெரியுமா ?

- சிவன் கோவிலினுள் வேறு எவர் காலிலும் விழுந்து வணங்கக்கூடாது. சிவனை மட்டுமே வணங்க வேண்டும்.
- கோவிலில் கண்ட இடங்களில் விழுந்து வணங்கக்கூடாது. கொடிமரத்தின் முன்பு மட்டுமே விழுந்து வணங்க வேண்டும்.
- திருநீற்றை தூண்களில் போடுவதும், கீழே சிந்துவதும், ஊதுவதும் மாபெரும் பாவமாகும். திருநீற்றை வலக்கையால் பெற்று பத்திரமாக எடுத்துச் செல்ல வேண்டும்.
- கோவிலினுள் சிவத்தை தவிர வேறு எதையும் பேசக்கூடாது.
- கோவிலை குப்பையாக்கக்கூடாது. குப்பைகளை உரிய இடத்தில் மட்டுமே போட வேண்டும். சத்தமிடக்கூடாது.
- வலம் வரும் போது, ஓடக்கூடாது. மெதுவாக வர வேண்டும்.

# சிவாலயத்தில் செய்யக் கூடாத குற்றங்கள் எவை?

- குளிக்காமல் போதல், கால் கழுவாமல் போதல்
- துவைத்து உலராத ஆடை அணிந்து செல்லுதல்,
- மனவெறுப்புடன் போதல், கோபப்படுதல், கூச்சலிடல்
- சட்டை அணிந்து செல்லுதல், குடும்பசெய்தி பேசல்
- செருப்பு அணிந்து செல்லுதல், குடை பிடித்தல்
- வாகனத்தை கோவிலின் உள்ளே செலுத்துதல்
- துப்புதல், அசுத்தமாக்குதல், வெற்றிலை போடுதல்,
- மலசலம் கழித்தல், மூக்கு சிந்துதல்
- மயிர் கோதி முடித்தல், சூதாடுதல்
- சண்டையிடுதல், காமப்பற்று வைத்தல்,
- இறைவனை தவிர வீண் பேச்சு பேசுதல்,
- காலை நீட்டி கொண்டு உட்காரல், தூங்குதல்,
- சுவாமிக்கும் பலிபீடத்திற்கும் குறுக்கே போதல்,

## சிவாலயத்தில் செய்யக் கூடாத குற்றங்கள் எவை ?

- கண்ட கண்ட இடங்களில் விழுந்து வணங்குதல்
- தூண்கள், கொடிமரம், விக்கிரகம், இடபம் ஆகியவற்றினையும் அவற்றின் நிழலை மிதித்தல்
- விக்கிரகத்தை தொடுதல், கால் நீட்டல்,
- விபூதியை தரையில், தூண்களில் கொட்டுதல்
- சண்டிகேசுவரர் முன் சொடுக்குதல், கை தட்டல்
- கோவில் சுவற்றில் கிறுக்குதல், மையிடுதல், பெயர் மற்றும் தொலைபேசி எண் எழுதுதல்
- விளக்கை கண்ட இடங்களில் ஏற்றல் கூடாது.
- நந்திக்கு குறுக்கே செல்லுதல் கூடாது.
- சிவனை தவிர எவர் காலில் வீழ்ந்து வணங்குதல்
- இக்குற்றம் புரிவார்கள் நரகத்தில் தண்டிக்கப்படுவர் என்று புராணங்களும் ஆகமங்களும் சொல்கின்றன.

# சிவாலயத்தில் செய்ய வேண்டியவை யாவை ?

- யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை: இறைவனுக்கு பூவும், நீருமாவது கொடுத்தல்
- கோவில் குளத்தில் நீராடி, உலர்ந்த வேட்டியணிந்து கோபுர வணக்கம் செய்யல்.
- தினமும், அல்லது வாரம் ஒருமுறையேனும் கோவிலுக்கு சென்று அப்பனைத் தரிசித்தல்.
- கோபுரத்தை இருகரம் கூப்பி வணங்குதல்.
- பலிபீடத்திற்கு முன்னால் வணங்குதல்,
- எத்தனை முறை வணங்க வேண்டும்? 3,5,7,9,12.
- மேற்கே தெற்கே கால் நீட்டலாம் - கிழக்கு வடக்கு திசைகளில் கால் நீட்டக் கூடாது.
- பஞ்சாட்சரம் சொல்லி அடிமேல் அடிவைத்து வலம் வரவேண்டும் – 3,5,7,12 தரம் பிரதஷினம்.
- பலிபீடம், இடபத்தையும் சேர்த்து வலம் வரணும்.

# சிவாலயத்தில் செய்ய வேண்டியவை யாவை ?

- துவார பாலகர், நந்தியை வணங்கி உள்ளே செல்லுதல்.
- விநாயகரை வணங்கிப் பின் சிவனை வணங்குதல்,
- திருமுறைகளை பண்ணோடு ஓதுதல் வேண்டும்.
- சபாபதி, தஷிணாமூர்த்தி, சந்திரசேகரர், சுப்ரமணியர், சமயாச்சாரிகள் நால்வரை வணங்க வேண்டும்.
- பார்வதி தேவியை வணங்குதல் வேண்டும்.
- சண்டேசுவரர் சன்னதியை அடைந்து வணங்குதல்
- நந்திதேவரை வணங்கி பலிபீடத்திற்கு இப்பால் மும்முறை வணங்குதல், அன்போடு பேசுதல்
- தீப எண்ணெய் வாங்கி விளக்கு ஏற்றுதல்,
- அன்னதானம், பிரசாதம் வாங்க மற்றும் எதற்கும் கூட்டம் போடாமல் அமைதியாக வரிசையாக நிற்றல் வேண்டும்.
- அன்னதானம், உழவாரப்பணி செய்தல் வேண்டும்.
- சிவபுராணம், 63வர் வரலாறு, திருமுறை படித்தல், குழந்தைகளுக்கு சொல்லி கொடுத்தல் வேண்டும்.
- மாத சம்பளத்தில் ஒரு குறிப்பிட்ட பங்கை கோவில் திருப்பணிகளுக்கு அருளுதல் வேண்டும்.

# தென்னாடுடைய சிவனே போற்றி !!
# எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!!

தமிழனாக, சைவனாக பிறப்பதற்கு பல பிறவிகளில் புண்ணியம் செய்திருக்க வேண்டும் !!!

நம் முன்னோர்கள் நமக்கு அருளிய அளப்பரிய புதையல்

## சைவ சமயம் 8

## பிறப்பின் குறிக்கோள்: தொண்டு

# உங்களின் இந்த மானுட பிறப்பு எதற்காக ?



## அரிது அரிது மானுடராய்ப் பிறத்தல் அரிது

**பல பிறவிகளில் செய்த நற்பலன்களின் விளைவே இந்த அற்புதமான உங்கள் மானுட பிறவி. இந்த பிறவியில் நாம் செய்வது யாது ?**

நாம் செய்யும் எல்லா செயல்களுக்கும் விளைவு உண்டு – நல்வினை, தீவினை. அதன் பயன்கள் எல்லா பிறவியிலும் தொடர்ந்து வரும். தீவினைகள் தொடர்ந்து வருத்தும். நல்வினைகள் இறைவனிடம் சேர்ப்பிக்கும். ஆகவே, நல்ல செயல்களை மட்டுமே நாம் எப்போதும் செய்ய வேண்டும்.

# மீதமுள்ள நம் வாழ்நாளில் நாம் என்ன செய்யப் போகிறோம்?



நம் வாழ்கை மிக குறுகிய காலமே. கூற்றுவன் வந்து அழைக்கும் போது நாம் எடுத்துச் செல்வதற்கு ஒன்றுமே இல்லை. நம் சொத்துக்களை நம் குழந்தைகளுக்கு கொடுத்தாலும், அவர்கள் யாரோ தான். நாம் செய்யும் அத்தனை பொருள்களும் ஒரு நாள் சாம்பலாக மாறும். இதுவே சத்தியம். இதனை நாமும் உணர்ந்து, பிறர்க்கும் உணர்த்தவே திருநீறு இடுகிறோம்.

கூற்றுவன் அழைக்கும் போது நம் கூட வருவது எது ? குற்றாலத்து கூத்தனும், வினைப் பயன்களும் மட்டுமே. அப்போ, நாம் உயிரோடு இருக்கும் வரை நல்வினைகளையே செய்தால் தப்பித்துக் கொள்ளலாம். நிலையாமையை உணர்ந்து செயல்பட வேண்டும்.

# நம் உடல் எதற்காக நமக்கு கொடுக்கப்பட்டுள்ளது ?

தலை - சிவனை வணங்க





கண் - நமக்காக நஞ்சுண்டவனைப் பார்க்க





செவி - சிவனின் பண்புகளையும் செயல்களையும் கேட்க



கால்கள் – அரன் கோவில் வலம் வர




மூக்கு – முக்கண்ணனைப் போற்றி ஒலிக்க





வாய் – சிவபெருமானை எப்போதும் வாழ்த்த



ஆக்கை – கோவில் வலம் வந்து பூக்களைச் சமர்பிக்க

நெஞ்சு – செஞ்சடையனை எப்போதும் நினைக்க



கைகள் – இறைவனை வணங்கித் தொழ



இளையான்குடி என்ற ஊரில் வாழ்ந்த வேளாளர், தினமும் சிவனடியார்களுக்கு மாகேசுர பூசை செய்த பின்பே தாம் திருவமுது செய்வார்.



# இளையான்குடி மாற நாயனார்

**மாகேசுர பூசை என்றால் என்ன ?**
**முறைப்படி அடியார்க்கு அமுது செய்வித்தல்**

மாறனின் பெருமையை உலகிற்கு உணர்த்த வறுமையை அருளினார். பின்னர் ஓர் நாள் அடியார்கள் யாரும் வராதிருக்க செய்து, இரவில் இறைவனே அடியார் வேடம் தரித்து வந்தார். மை இருட்டிலும் மழையையும் பொருட்படுத்தாது மாறனார், வயலில் சென்று முளைநெல்லை எடுத்து வந்தும் வீட்டின் கூரையை எரித்தும் திருவமுது படைத்தார். அப்போது சிவபெருமான், மாறனாருக்கு இடபாரூடராய் காட்சியளித்தார்.

சேதி நாட்டில், திருக்கோவலூரில் போரில் வெல்ல அரியவராகவும், சிவ வேடத்தை சிவமே என்றும் வாழ்ந்து வந்த அரசர் மெய்ப்பொருளார்



# மெய்ப்பொருள் நாயனார்

நேர் வழியில் வெல்ல முடியாத எதிரி நாட்டு அரசன் முத்திநாதன் வஞ்சகம் செய்து வெல்ல விரும்பினான். சிவனடியார் வேடம் புனைந்து கவளியை மறைத்துக் கொண்டு அரண்மனை புகுந்து மன்னனின் அறையினுள் புகுந்தான். தக்க சமயம் பார்த்து மன்னனை கத்தியால் குத்தினான். முத்திநாதனை கொல்ல வந்த மெய்க்காப்பாளன் தத்தனை மெய்ப்பொருள் நாயனார் தடுத்து அவனை நாட்டு மக்கள் ஒன்றும் செய்யாதவாறு நாட்டின் எல்லையின் வெளியே விட்டுவிடுமாறு பணித்தார். விட்டுவிட்ட செய்தி வந்த பின்னரே தன் உயிரை விட்டார். சிவ வேடம் புனைந்தவர் எதிரியாக இருப்பினும் சிவபெருமானாகவே கருதி செயல்பட்டவர் மெய்ப்பொருள் நாயனார். சிவபெருமான் இடபாரூடராய் காட்சி கொடுத்தார்.

# நாயன்மார்களும் சிவதொண்டும்



**திருக்குறிப்புத் தொண்டர்**
வண்ணானாகிய இவர் தினமும் ஒரு சிவனடியாரின் துணிகளை ஒலித்துக் கொடுத்த பின்னர் தான் தன் வேலைகளைச் செய்வார்.




**அதிபத்த நாயனார்** – மீனவரான இவர், தினமும் கடலில் தான் பிடிக்கும் முதல் மீனை சிவனுக்காக கடலிலேயே விட்டு விடுவார். இறைவன் ஒரு நாள் முதலில் தங்க மீனை இவருக்கு கொடுத்த போதும், அதை கடலிலேயே விட்டு விட்டார்

**அப்பூதி அடிகளார்** – திருநாவுக்கரசர் பெயரில் தண்ணீர்பந்தல், அறச்சாலைகள், குளங்கள், திருநந்தவனங்கள் அமைத்து அனைவருக்கும் தொண்டு செய்தார்.



பூசலார் நாயனார் – இறைவனுக்கு கோயில் கட்ட விழைந்து பொருட்செல்வம் இல்லாமையால் தன் மனதிலேயே இறைவனுக்கு தினமும் படிப்படியாக கோவில் கட்டி குடமுழுக்கும் வைத்த போது சிவபெருமான் எழுந்தருளினார்.







முருக நாயனார் – சிவாகமங்களில் விதிக்கப்பட்ட பூக்களை மெய்யன்போடு விதிப்படி கொய்து பலவகை மாலைகள் செய்து சிவனுக்கு சாத்தி பஞ்சாட்சரம் ஓதி தினம் அர்ச்சனை செய்தார்.

கண்ணப்ப நாயனார் – மாமிசம் தின்னும் வேடுவராயினும் சிவபெருமான் மேல் கொண்ட மிக்க அன்பினால், சிவபெருமானின் நாடகத்தின் போது, தன் கண்களையே குத்தி தோண்டி எடுத்து சிவபெருமானுக்கு சாற்றினார்.



# இன்று நாம் செய்யக்கூடிய சிவ தொண்டுகள்

- ✓ அன்னதான திட்டங்களுக்கு உதவிடல்
- ✓ அன்னதானமிடுதல்
- ✓ விளக்கு வைத்தல்
- ✓ மலர் சேகரித்து கொடுத்தல்
- ✓ நந்தவனம் அமைத்தல், பராமரித்தல்
- ✓ அபிஷேக பொருட்கள் கொடுத்தல்
- ✓ சிவனடியார்களுக்கு உதவிடல்
- ✓ ஆலய தூய்மை செய்தல்(உழவாரம்)
- ✓ ஆன்மீக சொற்பொழிவாற்றல்
- ✓ சொற்பொழிவு ஏற்பாடு செய்தல்
- ✓ திருமுறை ஓதுதல், ஓதுவித்தல்
- ✓ சமய வகுப்பு நடத்துதல்
- ✓ சமய புத்தகங்கள் வழங்குதல்
- ✓ சமய செய்திகளை அச்சிட்டு வழங்கல்
- ✓ பிறர் துன்பங்கள் நீங்க நாம் வழிபடல்
- ✓ பிறர் துன்பங்கள் கேட்டறிந்து அவர்களுக்கு ஆறுதல் கூறுதல்
- ✓ சங்க நாதம் முழங்குதல்
- ✓ கயிலாய வாத்தியம் முழங்குதல்
- ✓ ஆலய திருப்பணிகளுக்கு உதவுதல்
- ✓ விளக்குகளுக்கு எண்ணெய் கொடுத்தல்
- ✓ கோசாலை அமைத்தல், பராமரித்தல்
- ✓ திருநீறு, பிரசாதம் கொடுத்தல்
- ✓ பஞ்சாக்கரம் ஜெபித்தல், எழுதுதல்
- ✓ ஆலயத்திற்கு தேவையான பொருட்களை வாங்கி கொடுத்தல்
- ✓ இன்னும் எத்தனை எத்தனை ?

## திருநாவுக்கரசர் தேவாரம்

**கையில் உழவாரம்.**
**வாயில் தேவாரம்**

திருக்கோவில் இல்லாத திருஇல் ஊரும்
திருவெண்ணீறு அணியாத திருஇல் ஊரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடா ஊரும்
பாங்கினொடு பல தளிகள் இல்லா ஊரும்
விருப்போடு வெண் சங்கம் ஊதா ஊரும்
விதானமும் வெண் கொடியும் இல்லா ஊரும்
அருப்போடு மலர் பறித்திட்டு உண்ணா ஊரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே




கோவில் இல்லாத ஊரும், திருநீறு அணியாதவர்கள் இருக்கும் ஊரும், உடல் வணங்கி பக்தி மிகுதியால் மக்கள் பாடாத ஊரும், அழகான பல கோபுரங்களைக் கொண்ட கோவில்களை இல்லாத ஊரும், விருப்போடு வெண்மையான சங்கநாதம் ஊதாத ஊரும், மேற்கட்டியும் வெண்கொடிகளும் இல்லாத ஊரும், அரும்பாய் இருக்கும் மலரைப் பறித்து சிவனுக்கு அர்ப்பணித்துப் பின் உணவு உண்ணும் முறை இல்லாத ஊரும், ஊரே அல்ல. அவை மரங்கள் அடர்ந்த காடே ஆகும்.



பிறவித் துன்பத்திலிருந்து விடுபட, சிவத்தின் பால் அன்பு பூண்டு, சிவ தொண்டு செய்து வந்தால், இப்பிறவியில் மகிழ்ச்சியும் செல்வமும் இறுதியில் சிவப்பேறும் கிடைப்பது நம் முன்னோர்கள் கண்ட உண்மை. நம் மரபு வழி செல்வோம். சிவாயநம.

நமசிவாய உ சிவமயம் சிவாயநம

# தென்னாடுடைய சிவனே போற்றி !!
# எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி !!!

தமிழனாக, சைவனாக பிறப்பதற்கு பல பிறவிகளில் புண்ணியம் செய்திருக்க வேண்டும் !!!

நம் முன்னோர்கள் நமக்கு அருளிய அளப்பரிய புதையல்

## சைவ சமயம் 11

## உங்களுக்குத் தெரியுமா ?

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திற்க்கு முன்பே உள்ளது சைவ சமயமாகும். ஹரப்பா மொஹஞ்சதாரோ ஆகிய இடங்களில் செய்த அகழ்வாராய்ச்சிகளில் சைவ சமயம் பற்றிய குறிப்புகளும், சிவன் பற்றிய குறிப்புகளும் கிடைத்துள்ளன.

**உலகின் மிகவும் தொன்மையான இன்று வரை உயிரோட்டமுள்ள ஒரே சமயம் சைவ சமயமேயாகும்.**

பிரிட்டிஷ் அகழ்வாராய்ச்சி அறிஞர் சர். ஜான் மார்ஷல்



**சைவம் தென்னிந்தியாவின் மிகப் பழைய, வரலாற்றுக்கு முற்பட்ட சமயமாகும்.** ஜி.யு. போப்.

**“மனித சிந்தனைகளில் மிக முழூமையான, அறிவார்ந்த சிந்தனை சைவ சித்தாந்தமே! முனைவர் கபில சுவபில்**

“சைவ சித்தாந்தத்தில் காணப்படும் மெய்யியல் உண்மைகள் கிரேக்க மெய்யியலிலோ இலத்தீன் மெய்யியலிலோ காண முடியாதவை.”

H.R Hoyzington,the founder of church of South India ( CSI)

நம் முன்னோர்கள் பல ஆயிரம் ஆண்டுகள் ஆராய்ந்து ஆராய்ந்து நம் வாழ்வை இன்பமாக வாழ செதுக்கி செதுக்கி நமக்கு சொல்லிக் கொடுத்து அதை நம் அன்றாட வாழ்வில் இணைத்ததே நம் வாழ்வியல் பண்பாடு. அவை அத்தனையும் நம் அறிவு சார்ந்த சொத்துக்கள். Intellectual Properties.

ஒரு 15 விநாடிகளில் ஒரு செய்தியானது எப்படி நைந்து உருக்குலைந்து வேறு மாதிரியான செய்தியாகிறது என்பதை அடுத்து வரும் ஓர் எடுத்துக்காட்டில் நன்கு கவனியுங்கள்

## ஒரு படத்தில் வரும் வடிவேலு நகைச்சுவையை ஒரு முறை சிந்தித்து பாருங்கள்.

ஒரு திருமணத்தில் மாப்பிள்ளை(வடிவேலு) நபர் ஒருவரிடம்(முதலாமவர்) இவ்வாறு கேட்கிறார்:

“ஒரு செம்பிலே தண்ணீர் கொண்டு வாப்பா..”

முதலாமவர் இரண்டாமவரிடம்:

“மாப்பிள்ளை செம்பிலே தண்ணீர் கேட்கிறார்”

இரண்டாமவர் மூன்றாமவரிடம்:

“மாப்பிள்ளை செம்பு கேட்கிறார்”

மூன்றாமவர் நான்காமவரிடம்:

“மாப்பிள்ளை செம்பு இருந்தால் தான் தாலி கட்டுவேன் என்கிறார்”

**பார்த்தீர்களா ? ஒரு 15 விநாடிகளில் ஒரு செய்தியானது மனிதர்களின் வாய் வழியே பயணிக்கும் போது எப்படி சிதைவுறுகிறது என்று? நம் தலைமுறைகளின் முக்கிய செய்திகள் பயணிக்கும் ஊடகத்தின் தன்மை அத்தகையது !**

சில நிமிடங்கள் இதை ஆழ சிந்தித்து பாருங்கள். நம் முன்னோர்களின் அனுபவ அறிவு செய்திகள் யாவும் தலைமுறை தலைமுறையாக, அரசன், அடிமைத்தனம் என்று பல்வேறு மாறிக் கொண்டே இருந்த சமூக அமைப்புகளின் வழியே, தந்தை–மகன் வழியே என்று பல ஊடகத்தின் வழியே பயணித்து பயணித்து, கொஞ்சநஞ்ச காலம் அல்ல, பல ஆயிரம் ஆண்டுகள் பயணித்து வந்துள்ளன. அவ்வாறாயின், அந்த அறிவு செய்திகள் எவ்வளவு நைந்து சிதைவுற்றிருக்க வேண்டும் ?

ஆனால், இன்று நம்மிடம் இன்னும் பெரும்பாலான செய்திகள் அப்படியே கட்டுக்குலையாமல் இருப்பது மாபெரும் அதிசயமல்லவா ? வெகு சிலவே மூட நம்பிக்கையாக சிதைவுற்றுள்ளது. இதைவிட ஒரு அதிசயம் உலக வரலாற்றில் இருக்க முடியுமா ? இந்த சாதனை அத்தனையும் நம் முன்னோர்களையே சேரும். பல ஆண்டுகள் யோசித்து யோசித்து அனுபவித்து அத்தனை அனுபவத்தையும் நம் அன்றாட வாழ்வில் இணைத்து நம் வாழ்வு சந்தோஷமாக இருக்க எத்தனை பெரிய உதவி செய்துள்ளார்கள் ? இவை யாவும் நம் அறிவு சார்ந்த சொத்துக்களாகும் (இன்றைய நவீன உலகம் இதை Intellectual Property என பேணிக் காக்கிறது)

**இத்தகைய சமுதாயத்தில் நாம் பிறக்க எத்தனை தவம் செய்திருக்க வேண்டும் ? இங்கே பிறந்து வாழ இறைவனுக்கு நாம் நன்றி சொல்ல வேண்டாமா ?**

## கோவில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம். ஏன் ?

கோவில்கள் இடி தாங்கி கருவியாக நின்று ஊரையே காப்பாற்றின. கோபுர கலசத்தில் விவசாயத்திற்கு தேவையான தரமான மூல விதைகள் சேமிக்கப்பட்டன. இவை 12 ஆண்டுகளுக்கு அப்படியே இருக்கும். 12 ஆண்டுக்கு ஒரு முறை கும்பாபிஷேகம் செய்யப்பட்டு புதுப்பிக்கப்படும். வெள்ளம் வறட்சி போன்ற இயற்கை பாதிப்புகளால் இந்த மூல விதைகள் காக்கப்படும்.

## கோவில் கருவறை இருட்டாக இருப்பது ஏன் ?

அநாதி காலந்த்தொட்டு அறியாமையில் மூழ்கியிருக்கும் உயிர்களைத் திருவருட்சக்தியால் அறியாமையில் நீக்கிச் சிவப்பேற்றைத் தருவதற்காகவே கருவறையை நம் முன்னோர் இருட்டறை ஆக்கித் திருவருள்புரியும் திருவுருவங்களைக் கருவறையினுள் வைத்தனர். கருவறை இருட்டறையாக இருப்பதற்குக் காரணம் புரிகிறதா? புரியாமை என்ற அறியாமையின் அடையாளமே அந்த இருட்டு!



# கோவில் கருவறை இருட்டாக இருப்பதன் சூட்சுமம் என்ன ?

வாஸ்து கணக்கு பிரகாரம், நீள, அகல, உயரங்களை மிகத் துல்லியமாக கணக்கிட்டு ஆலயங்களை உருவாக்கிய நம் முன்னோர்கள், பிரபஞ்ச சக்திகளை கிரகிக்கும் பகுதியாக கருவறையை அமைத்தனர். பிரபஞ்சத்தில் உள்ள கதிர்கள் எல்லாம் ஒரு வகை மின்னூட்டம் பெற்ற துகள்களாகும். இந்த அலைகள் கோவில் கருவறை விமானம் மீதுள்ள கலசங்கள் மூலம் கருவறைக்குள் இருக்கும் மூலவர் மீது பாயும். பிறகு அங்கிருந்து அந்த அலைகள் ஆலயம் முழுக்க விரவிபரவும். எனவேதான் ஆலயங்களுக்கு செல்லும்போது நமது ஆற்றல் அதிகரிக்கிறது. இதற்காகவே நம் முன்னோர்கள் கருவறை அமைப்பதில் மட்டும் அளவு கடந்த நுட்பத்தை கடைபிடித்தனர். எல்லா ஆலயங்களிலும் கருவறையானது, வாசல் தவிர மற்ற அனைத்துப் பகுதிகளும் மூடப்பட்டதாக இருக்கும்.

# கோவிலில் மணி ஏன் அடிக்கப்படுகிறது ?



- அபசகுண வார்த்தைகள், அபசகுண ஒலிகள் நம் காதுகளில் கேட்காமல் கரைந்து போகும்
- நம்மைச் சுற்றியுள்ள தீய அலைகளும் துர் தேவதைகளும் விலகி ஓடிப் போகும்.
- மணியின் ஒலி அலைகளிலில் மனிதனின் எண்ண ஓட்டங்கள் யாவும் கட்டுப்படுத்தப்பட்டு ஒரு நேர் கோட்டில் குவிந்து இறைவனை தரிசிக்க உதவுகிறது.
- ஆழ் மனதில் உறங்கிக் கிடக்கும் நம்மை இந்த மணி அலைகள் தட்டி எழுப்பி நம் ஆன்மீக ஆற்றலை சுறுசுறுப்படையச் செய்கிறது.
- பல மைல் தூரம் கேட்கும் மணியின் ஒலிகளால் கோவிலில் நடக்கும் பூசையை தூரத்திலிருந்து அனைத்து பக்தர்களும் கேட்குக் கொண்டு இறைவனை மனதில் நினைத்து தியானித்துக் கொள்ள முடியும்.



# பிரதோஷ வழிபாடு

பிரதோஷ நேரம் – மாலை 4.30 முதல் 7.30 வரை.
வளர்பிறை, தேய்பிறை திரயோதசி (13 ஆம் நாள்)

**சிவபெருமான் கருணை**

பாற்கடலை கடைந்து
ஆலகால விடம் வெளிவந்த
போது சுந்தரர் எடுத்துக்
கொடுக்க உயிர்கள் மீதுள்ள
கருணையால் அவற்றை காக்க
சிவபெருமான் அதை
உட்கொள்ள, பார்வதி அவர்
தொண்டையில் நிறுத்த, சிவன்
நீலகண்டனானார். இது நடந்த
காலமே பிரதோஷ காலம்.

**பிரதோஷ சிறப்பு**

கலைமகள் வீணை இசைக்க
இலஷ்மி பாட
திருமால் மிருதங்கம் இசைக்க
இந்திரன் புல்லாங்குழல் ஊத
பிரம்மன் தாளமிட
தேவர்களும் முனிவர்களும்
வணங்கும் பிரதோஷம்

கொடிய பாவமும் நீங்கும்
இளமையில் இன்பம்
கடன், வறுமை நீங்கும்
பாவ மூட்டை ஒழியும்



# சிவ வழிபாடு செய்யும் மரபு

1. குரு வணக்கம்
2. நால்வர் துதி
3. விநாயகர் வாழ்த்து
4. திருமுறை 1 முதல் 12 வரை
5. உமையம்மை பதிகம்
6. முருகர் பதிகம்
7. வாழ்த்து பாடல்



பஞ்சபுராணம் பாடுதல்

திருமுறையே
வாழ்வின் நெறிமுறை

வீட்டில் தினமும் காலை உணவு உண்ணும் முன், நமக்கு பெருங் கருணை கொண்டு, இந்த பிறவியைக் கொடுத்த சிவபெருமானுக்கு நன்றி சொல்லும் விதமாக திருமுறைகளை வாயார பாடுவோம். போற்றித் துதிப்போம்.

# திருஞானசம்பந்தர் நிகழ்த்திய அற்புதங்கள் சில...



- ✓ திருமறைக்காடு = மூடிய கோயில் கதவுகளை பாடித் திறக்க செய்தார், அப்பர் சுவாமிகளோடு இணைந்து.
- ✓ திருப்பாச்சிலாச்சிரமம் = மழவன் மகளின் முயலகன் நோய் நீக்கினார்.
- ✓ திருமருகல் = பாம்பு தீண்டிய வணிகனின் விடம் நீக்கினார்
- ✓ திருவோத்தூர் = ஆண்பனையை பெண்பனை ஆக்கினார்
- ✓ மதுரை = தான் தங்கியிருந்த மடத்திற்குக் கூன்பாண்டியன் வைத்த நெருப்பை அவனுக்கே வெப்பு நோயாகப் பற்றச் செய்தார். அவன் மனைவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் வேண்ட, நீறு பூசி அவனின் வெப்பு நோய் நீக்கி, அவனின் கூன் நீக்கச் செய்து அவனை "நின்றசீர் நெடுமாறன்" ஆகினார்.
- ✓ மதுரை = வாதத்துக்கு அழைத்த புத்தநந்தியின் தலை துண்டாகுமாறு செய்தார்.
- ✓ மயிலாப்பூர் = குடத்தில் சாம்பலாக இருந்த பூம்பாவை என்னும் பெண்ணை உயிருடன் வரச் செய்தார்.
- ✓ திருஏடகம் = வைகையாற்றில் இட்ட ஏடு எதிர்திசையில் பயணித்து கரை ஏறியது – புனல்வாதம். அனல்வாதமும் புரிந்தார்.
- ✓ திருப்பூந்துருத்தி = நாவுக்கரசர் இவரை சுமந்த இடம்.

# திருநாவுக்கரசர் நிகழ்த்திய அற்புதங்கள் சில...




- "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் கொள்கையில் நின்று உழவாரத்திருப்பணி கோவில் கோவிலாக சென்று செய்தார்.
- "மகேந்திரவர்மப் பல்லவனை" சைவராக்கினார்
- திருமறைக்காட்டில் பாடியே மூடியேயிருந்த கோவில் கதவை திறக்கச் செய்தார்.
- பாம்பு தீண்டி இறந்த அப்பூதியடிகளின் மகனை உயிர் பெற்று எழச் செய்தார்.
- திருவையாற்றில் மூழ்கி எழுந்து, கயிலாயக் காட்சியை கண்டார்.
- மகேந்திரவர்மப் பல்லவன் இவரை கல்லில் கட்டி கடலில் வீசிய போதும், "கடலில் பாய்ச்சினும் நல்துணை ஆவது நமச்சி வாயவே" எனப் பாடி கடலில் கல்லுடன் மிதந்து கரை சேர்ந்தார்.

# சுந்தரர் நிகழ்த்திய அற்புதங்கள் சில




- 12000 பொன்னை மணிமுத்தாற்றில் போட்டு கமலாலயத்தில் எடுத்தார்.
- இவர் பொருட்டு காவிரி ஆறு இரண்டு கூறாகப் பிளந்து நின்று நடுவில் செல்ல வழிவிட்டது.
- செங்கல்லை தங்கக் கல்லாக மாற்றினார்.
- அவிநாசியில் முதலை விழுங்கிய குழந்தையை அம்முதலையின் வாயின்று மூன்றாண்டு வளர்ச்சியுடன் அழைத்துக் கொடுத்தார்.
- பரவையார் மீது இவர் கொண்ட காதலுக்கு சிவபெருமானே உதவி புரிந்தார்.
- இரு கண்ணையும் இழந்தவர், காஞ்சியில் ஒரு கண்ணையும் திருவாரூரில் ஒரு கண்ணையும் பதிகம் பாடி பெற்றார்.
- வெள்ளை யானையில் ஏறி திருக்கைலாசத்திற்கு எழுந்தருளினார்.

# வாழ்கை முழுவதும் திருமுறை பாடுங்கள்

- ✓ **குழந்தைப் பேறு பெற**
  - ✓ கண்காட்டு நுதலானும்
  - ✓ முத்திலங்கு
  - ✓ நன்றுடையானை
  - ✓ மட்டுவார்
- ✓ **வினை நீக்கம்**
  - ✓ தலையே நீ வணங்காய்
  - ✓ வேயுறு தோளிபங்கன்
  - ✓ போகமார்த்த
  - ✓ மறையுடையாய்
  - ✓ அவ்வினைக்கு இவ்வினை
  - ✓ கற்றாங்கு எரியோம்பி
- ✓ **நோயிலிருந்து பாதுகாப்பு**
  - ✓ மந்திரமாவது நீறு
  - ✓ துணிவளர் திங்கள்
  - ✓ மட்டிட்ட புன்னை
  - ✓ மின்னுமா மேகங்கள்
  - ✓ ஒன்றுகொலாம்
  - ✓ மீளா அடிமை உமக்கே
  - ✓ ஆலந்தான் உகந்து
  - ✓ பூசுவதும் வெண்ணீறு
  - ✓ கண்டு கொள்ளரி
- ✓ **கல்விச் செல்வம்**
  - ✓ ஒருருவாயினை மானாங்
  - ✓ துஞ்சலும் துஞ்சல்
  - ✓ காதலாகி கசிந்து
  - ✓ சொற்றுணை வேதியன்
  - ✓ மற்றுபற்று எனக்கு
  - ✓ இரும்பு தரு மனத்தேனை
- ✓ **செல்வம் பெற**
  - ✓ நீறு சேர்வதோர்
  - ✓ வாசி தீரவே
  - ✓ இடரினும் தளரினும்
  - ✓ நெய்யும் பாலும்

# கரு முதல் திரு வரை – திருமுறை பதிகங்கள்

- ✓ தம்மையே புகழ்ந்து
- ✓ பத்தூர் புக்கிரந்து
- ✓ வேத வேள்வியை
- ✓ வளைந்தது
- ✓ வாழ்க அந்தணர்
- ✓ கொடுகு
- ✓ பொன் செய்த மேனி

✓ **திருமணம் நடக்க**

- ✓ நீறுவரி ஆடரவொடு
- ✓ சடையாய் எனுமால்
- ✓ அயிலாரும்
- ✓ பட்ட நெற்றியர்
- ✓ மண்ணில் நல்ல
- ✓ பற்றற்றார் சேர்

✓ **இறைவனை போற்றி துதிக்க**

- ✓ எல்லாஞ் சிவனென்ன
- ✓ கற்றவர்கள் உண்ணும்
- ✓ வேற்றாகி விண்ணாகி
- ✓ பொறையுடைய பூமி
- ✓ பாட்டான நல்ல

✓ **திருமேனி காண்டல்**

- ✓ வடிவேறு திரிசூலம்
- ✓ வானவன் காண்
- ✓ நீறேறு திருமேனி
- ✓ இருநிலனாய் தீயாகி
- ✓ ஓசை ஒலியெலாம் ஆனாய்
- ✓ உம்பர்கட்கு அரசே

✓ **அடியார்களை வழிபாடு செய்தல்**

- ✓ தில்லைவாழ் அந்தணர்

✓ **வீடுபேறு**

- ✓ கல்லூர்ப் பெருமணம்
- ✓ எண்ணுகேன் என்
- ✓ தானெனை முன் படைத்தான்
- ✓ முத்தி நெறி அறியாத

## திருவதிகை – முப்புரம் எரித்தல்

கமலாட்சன், தாராட்சன், வித்யுந்மாலி – தங்க, வெள்ளி, இரும்பு கோட்டை. பூமி தேர், 4 குதிரை வேதம், பிரம்மா சாரதி, மேருமலை வில், சூரிய சந்திர சக்கரம். அச்சுமுறி விநாயகர். தேவர்களின் கர்வம். சிவனின் சிரிப்பு. இரண்டு ஆணவமும் அழி.

342. அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே.

மும்மலம் அறுத்து இறைவனை உணரும் தத்துவத்தையே முப்புரம் எரிக்கும் வரலாறு உணர்த்துகிறது.

## திருவழுவூர் – தாருகாவனத்து முனிவர்கள்.

தாருகாவனத்து முனிவர்கள் 48,000 பேர். யோக வேள்வி. கர்வம். சிவன் பிட்சாடனராய் வருதல். கற்புநெறி தவறல். ஆபிசார வேள்வி நடத்துதல். வேள்வியில் தோன்றிய மான், மழு, யானை. தோலுரித்து போர்த்திக் கொள்ளல்.

# சிவனின் அட்ட வீரட்ட தலங்கள் தரிசனம் செய்தீர்களா ?

## திருக்கோவல் – அந்தகன் வதம்

சூரபத்மனால் துன்பப்பட்ட தேவர்கள் சிவ குமாரனை பெற விரும்பினார்கள். மன்மதனை காமபாணம் எய்யுமாறு சிவனிடம் அனுப்ப.. சிவன் யோக நிலையில் இருந்தார். – மன்மதனை இறைவி எழுப்பினாள்.

346. இருந்த மனத்தை இசைய இருத்தி
பொருந்தி இலிங்க வழியது போக்கி
திருந்திய காமன் செயலழித்து அங்கண்
அருந்தவ போகம் கொறுக்கை அமர்ந்ததே.

மனத்தை அடக்கி பிராணவாயுவை சுழுமுனையில் ஏற்றிப் பழகினால் காமனை வெல்லலாம்.

## திருக்கண்டியூர்–பிரம்மன் தலை கொய்யல்

கண்டனபுரம் – கண்டியூர். சிவனருள் பெற்று சிவனைப் போன்று 5 தலை பெற்றார் பிரமன். ஆணவம் மேலிட பார்வதி கோபம் கொள்ள, பைரவர் மூலம் 5 வது தலை கொய்யப்பட்டது. அடிமுடி நிகழ்வின் போதும் பிரம்மன் சிவநிந்தனை செய்ததன் காரணமாக தலை கொய்யல்.

கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தான்அங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே.

மூலாதாரம் 4 பிரிவுடையது. மூலாதாரத்துடன் தொடர்புடைய தெய்வீக ஆற்றல் வரும் 5 ம் வழி மறைவானது

## திருவிற்குடி – ஜலந்திரன் வதம்

கர்வ இந்திரன் கயிலை – சிவன் பூதமாகி தடுக்க, வஜ்ஜிராயுத்த்தை வீச, பேராற்றல் வெளிப்பட, கடலில் குழந்தை ஜலந்திரனாக. பிரம்மனிடம் வரம் பெற்று கயிலை எதிர்க்க, கிழவராக சிவன் சக்கரம் கிழித்து – கிழித்து இறந்தான்.

**342. எங்கும் கலந்தும் என் உள்ளத்து எழுகின்ற**
**அங்க முதல்வன் அருமறை ஓதிபால்**
**பொங்கும் சலந்தரன் போர்செய் நீர்மையன்**
**அங்கு விரற்குறித்து ஆழிசெய் தானே.**

நம் உடம்பில் தோன்றும் ஒவ்வொரு சக்தியும் ஒரு விளைவை ஏற்படுத்தும். தீய சக்தி இறைவனுக்கு எதிராக செல்லும்போது அவனே அழிப்பான்.

## திருப்பறியல் – தக்கன் செருக்கு

தக்ஷன் தாஷாயினி. கயிலையில் பூதங்கள் தடுக்க கர்வம் கொண்டான். சிவனை அழைக்காமல் யாகம். தேவர்களும் கலந்து கொள்ள, தாஷாயினியும் போய் அவமானப்பட, வீரபத்திரரை உருவாக்கி அழித்தார். தஷனுக்க ஆட்டுத்தலை.

**344. முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்**
**அத்தி யுரிஅரன் ஆவது அறிகிலர்**
**சத்தி கருதிய தாம்பல தேவரும்**
**அத்தீயின் உள்ளெழுந் தன்று கொலையே.**

எந்த வேள்வியும் இறைவனை விலக்கி செய்ய இயலாது. 3 விதமான யாக தீயை போல உடலில் பயன்படுத்தி இறைவன் அருளன்றி சித்தி பெற இயலாது.

## திருக்குறுக்கை – மன்மதன் எரிப்பு

சூரபத்மனால் துன்பப்பட்ட தேவர்கள் சிவ குமாரனை பெற விரும்பினார்கள். மன்மதனை காமபாணம் எய்யுமாறு சிவனிடம் அனுப்ப.. சிவன் யோக நிலையில் இருந்தார். – மன்மதனை இறைவி எழுப்பினாள்.

**346. இருந்த மனத்தை இசைய இருத்தி**
**பொருந்தி இலிங்க வழியது போக்கி**
**திருந்திய காமன் செயலழித்து அங்கண்**
**அருந்தவ போகம் கொறுக்கை அமர்ந்ததே.**

**மனத்தை அடக்கி பிராணவாயுவை சுழுமுனையில் ஏற்றிப் பழகினால் காமனை வெல்லலாம்.**

## திருக்கடவூர் – கூற்றுதைத்தல்

**கடகம்-ஊர்**. குச்சகர் குமாரர் மிருக கண்டுயர் விருத்தை என்பவரை மணந்து மிருகண்டு புதல்வர். மருத்துவதியை மணந்து மார்க்கண்டேயர்.
**காலனை வீடு செய்த கழல்** – அப்பர்

**மூலத் துவாரத்து மூளும் ஒருவனை**
**மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்**
**காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்**
**ஞாலக் கடவூர் நலமாய்**
**இருந்ததே.** திருமந்திரம்345.

மூலாதரத்து எழும் அக்னியை சுழுமுனை நாடியில் ஏற்றி தலைவரை கொண்டு செல்பவரை காலனாலும் ஒன்றும் செய்ய இயலாது.

## திருநாவுக்கரசரை சமணர்கள் கல்லில் கட்டி கடலில் தூக்கி போட்ட போது பாடிய பதிகம்




**சொற்றுணை வேதியன் சோதி வானவன்**

**பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்**

**கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்**

**நற்றுணை யாவது நமச்சி வாயவே.**

பொழிப்புரை: வேதமான வாசகத்திற்கு நிகரான வாக்கியப் பொருளாக உள்ளவனாய்ப் பரஞ்சோதியாகிய அழியாத வீட்டுலகினனாய் உள்ள எம்பெருமானுடைய, பொலிவுடைய, தமக்குத்தாமே இணையான சேவடிகளை உள்ளம் பொருந்தக் கைதொழுதலால் கல்லைத் துணையாகச் சேர்த்து அதனோடு இணைத்துக் கடலில் தள்ளிவிட்டாலும் எம்பெருமானுடைய திருவைந்தெழுத்தே நமக்குப் பெரிய துணையாகும்

## மாணிக்கவாசகர் திருவாசகம் அச்சப்பத்து

**புற்றில்வாழ் அரவும் அஞ்சேன்**
**பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்**
**கற்றைவார் சடைஎம் அண்ணல்**
**கண்ணுதல் பாதம் நண்ணி**
**மற்றுமோர் தெய்வந் தன்னை**
**உண்டென நினைந்தெம் பெம்மாற்கு**
**கற்றிலா தவரைக் கண்டால்**
**அம்மநாம் அஞ்சு மாறே**




*விளக்கஉரை*: கொடிய விடம் உடையது பாம்பு. அந்த விடம் நம் உடலில் தீண்டப்பெற்றால் உடன் இறப்பது திண்ணம். அத்தகைய கொடிய பாம்பிற்கும் கூட நான் அஞ்ச மாட்டேன். உண்மையைப் போல் சொல்கின்ற பொய்யர்களைப் பார்த்தும் கூட நான் அஞ்ச மாட்டேன். ஆனால் யாரைப் பார்த்தால் எனக்கு அளவில்லாத அச்சம் வருகிறது தெரியுமா ? கற்றையான நீண்ட சடையை உடைய, யாவர்க்கும் பெரியோனாகிய, நெற்றிக் கண்ணை உடைய சிவபெருமானின் திருவடி அருகே சென்று, அதைப் பார்த்த பின்பும், இன்னும் வேறொரு தெய்வம் இருப்பதாக எண்ணிக் கொண்டு, சிவபெருமானைப் போற்றாதவரைக் கண்டால், ஐயோ, என் அச்சத்திற்கு அளவே இல்லை

# திருநாவுக்கரசர் தேவாரம்




**திருநாமம் அஞ்செழுத்தும் செப்பா ராகில்**
**தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்**
**ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்**
**உண்பதன்முன் மலர்பறித்திட்டு உண்ணா ராகில்**
**அருநோய்கள் கெடவெண்ணீறு அணியா ராகில்**
**அளியற்றார் பிறந்தவா றேதோ என்னில்**
**பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்தும்**
**பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின் றாரே.**

*பொழிப்புரை* திருநாமமாகிய அஞ்செழுத்தை ஒருகாலும் செப்பாராயின், தீவண்ணருடைய இயல்பை ஒருகாலும் பேசாராயின், திருக்கோயிலினை ஒருகாலம் வலம் வாராராயின், உண்பதற்குமுன் பல மலரைப் பேரரும்பாய் உள்ள நிலையிற் பறித்து அவற்றை இறைவனுக்கு இட்டுப்பின் உண்ணாராயின், கொடுநோய்கள் கெட வெண்ணீற்றை அணியாராயின், அங்ஙனம் செய்யாதாரெல்லாரும் இறைவனது திருவருளை இழந்தவராவர். அவர்கள் பிறந்த முறைமை தான் யாதோவெனின், தீராத கொடுநோய்கள் மிகத் துன்புறுத்தச் செத்து, வரும் பிறப்பிலும் பயனின்றி வாளா இறந்து மீளவும் பிறப்பதற்கு அதுவே தொழிலாகி இறக்கின்றார் ஆதலேதான்.

## இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க




உலகிலேயே ஒப்பற்ற ஞான நூல்களாக நம் முன்னோர்கள் நமக்கு அருளியது பன்னிரு திருமுறையும் சைவ சித்தாந்த சாத்திரமும். நான் அவற்றை படிக்க ஆரம்பித்தவுடன் துன்பங்கள் எல்லாம் ஓடி மறைந்து என் வாழ்கை இன்பமயமானதாக ஒளிர்கிறது. சிவ அனுபவம் பரவசம். நீங்களும் திருமுறையும் சைவ சாத்திரமும் தினமும் படியுங்கள்.

**கேக் வெட்டி விளக்கை அணைக்காதீர்கள். மாறாக, திருமுறை பாடி, விளக்கேற்றி, கோவிலுக்குச் சென்று பிறந்த நாள், திருமண நாள் கொண்டாடுங்கள். இந்த பதிகத்தை வாழ்த்து பாடலாக படியுங்கள்.**

## பிறந்தநாள் / திருமணநாள் வாழ்த்து

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்
கண்ணில் நல்லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.




திருஞானசம்பந்தர் தேவாரம் மூன்றாம் திருமுறை

நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் வாழ்வில் அனைத்து வளங்களும் பெற்று சீரும் சிறப்புமாக வாழ்க. ஓம் நமசிவாய. திருச்சிற்றம்பலம்.

சைவ சமயத்தின் ஞானம் அளப்பரியது. சிவத்தின் திருவடியை சேர்விப்பது. இது இவ்வுலகிற்கு மிகப்பெரும் புதையல். இதற்கு 3 முக்கிய இன்றியமையாத செயல்களை நாம் ஒவ்வொருவரும் கட்டாயம் செய்தே தீர வேண்டும். ஓம் நமசிவாய.

1. சைவ சயம ஞானத்தை நம் வளரும் தலைமுறையினர் அனைவரிடமும் சேர்ப்பிப்பது நம் தலையாய கடமை. சைவ வகுப்புகள் இதற்கு இருதயம் போன்றது.
2. நம் சமயத்திற்கு கண்களாக இருப்பது ஆலயங்கள். பூமிக்கடியில் இருக்கும் அத்தனை சிவாலயங்களும் மேலே வந்து பூஜிக்கப்பட வேண்டும். இதற்கு தேவையனவற்றை செய்யுங்கள்.
3. நாம் சைவ சமய ஞானத்தை கற்று சிவபெருமான் திருவருள் பெற்று, நம் ஆன்மாவை உய்வடையச் செய்ய ஆவன செய்வோம்.

இந்த மூன்றையும் குற்றமில்லாது விரைவாக செய்யும்படி உங்கள் திருவடிகளில் வணங்கி மன்றாடி கேட்டுக் கொள்கிறோம். திருச்சிற்றம்பலம்.



**சிவசிவ**



**சிவசிவ**

**நன்றி, வெல்க தமிழ் மீனாகுமார்**

# பன்னிக்கரணை சிவனடியார் திருக்கூட்டம்

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெலாம்